LONGMANS' INDIAN SERIES

Longmans' Indian Stories
for School Reading

GRADE I

# DHRUVA

TAMIL EDITION

லாங்மன்ஸ் இந்தியக் கதைகள்

# துருவன்




[illegible]ONGMANS, GREEN & CO. LTD.
[illegible]7 MOUNT ROAD, MADRAS
[illegible]ALCUTTA AND BOMBAY

LONGMANS' VERNACULAR SERIES FOR MADRAS

# Longmans' Indian Stories

FOR SCHOOL READING

GRADE I

# DHRUVA

TAMIL EDITION

லாங்மன்ஸ் இந்தியக் கதைகள்

# துருவன்






LONGMANS, GREEN & CO., LTD.
167, MOUNT ROAD, MADRAS
6, OLD COURT HOUSE STREET, CALCUTTA
53, NICOL ROAD, BOMBAY
1928

# துருவன்

I

முன் ஒரு காலத்தில் ஓர் அரசன் இருந்தான். அவன் மிகவும் நல்லவன். அவனுக்கு உத்தான பாதன் என்று பெயர். அவனுடைய ஆளுகை யில் குடிகள் கவலையில்லாமல் சந்தோஷமாக இருந்தார்கள். ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் கடமையைச் செவ்வையாகச் செய்து வாழ்ந்து வந்தனர். அவர்கள் உத்தானபாதனிடத்தில் அதிகபிரியம் வைத்திருந்தார்கள். அரசனும் அவர்களை நேசித்து நீதியுடன் அரசுபுரிந்து வந் தான். அவனைப்போலவே அவனுடைய நியா யாதிபதிகளும் சிறிதும் நீதி தவருதவர்கள். ஆகையால் ஜனங்கள் மிகவும் களிப்புடன் வாழ்ந்துவந்தார்கள்.

உத்தானபாதன் இரவில் மாறுவேஷம் தரித்து நகர்சோதனை செய்வது வழக்கம். ஒருநாள், அவன் ஒரு ஏழையைப்போல் மாறுவேஷம் பூண்டு தனது நகரத்து வீதியொன்றில் போய்க் கொண்டிருந்தான். அப்பொழுது அவன், ஜனங் கள் பேசிக்கொள்வதையும், எவர் ஏழைகள், எவர் கஷ்டப்படுகிறவர்கள், எவருக்கு என்ன குறை ஏற்பட்டது, என்ற இவைகள் எல்லாவற் றையும் தெரிந்துகொண்டான். மேலும், எவர் தீங்குசெய்பவர், எவர் கருணையுள்ளவர், என்ப தையும் அறிந்துகொண்டான். கடைசியாக அவன் அரண்மனைக்குச் சென்றான்.

மறுநாள், அவன் சில சேவகர்களை அனுப்பி ஜனங்களுக்குக் கெடுதல் செய்யும் துஷ்டர்களை எல்லாம் தன்னிடம் கொண்டுவரச் செய்தான்.

சில கொடியவர்கள், சேவகர்களைக் கண்டதும் பயந்து ஓடினார்கள். ஆனால், அரசன் உத்தரவுக்குப் பயந்துவந்தார்கள். அரசன் அவர்களைப்பார்த்து, "நீங்கள் இனிமேல் எல்லோரிடத்திலும் அன்புடன் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் நான் உங்களிடத்தில் பிரியமாக இருக்கமாட்டேன். மேலும், நீங்கள் பிறரிடத்தில் நியாயமாக நடந்துகொள்ளாவிட்டால் நான் உங்களிடத்தில் கருணையுள்ளவனாக இருக்கமுடியாது. உங்களுக்கு என் எண்ணத்தை இப்பொழுது சொல்லிவிட்டேன். இனி நீங்களே உங்களுடைய நன்மையைத் தேடிக்கொள்ளவேண்டியது" என்று புத்தி சொன்னான். மேலும் அவன், "நீங்கள் யாருக்காவது கெடுதி செய்தால், உங்களை உடனே ஊரைவிட்டுத் துரத்திவிடுவேன்" என்றும் கண்டிப்பாகச் சொன்னான். இவ்விதமாக கெட்டவர்களைத் தண்டித்தும் நல்லவர்களைக் காப்பாற்றியும் வந்தான்.

## II

தக்கவயதில் உத்தானபாதன் கலியாணம் செய்துகொண்டான். அவன் மனைவியின் பெயர் சுநீதி. அவள் நல்ல நடத்தையும், அழகும் உள்ளவள். அரசனுக்கு அவளிடத்தில் அதிக அன்பு உண்டு. அவள் மிகவும் நல்லவள்; ஏழைகளிடத்தில் இரக்கமுள்ளவள்; நோயால் கஷ்டப்படும் பெண்பிள்ளைகளை அடிக்கடி கவனித்துக் காப்பாற்றுவாள். அவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுத்து வருவாள்.

அனேக நாட்களாகியும் சுநீதிக்குக் குழந்தையே பிறக்கவில்லை. குழந்தை இல்லாத குறையால் உத்தானபாதனும் சுநீதியும் மிகவும் வருத்தப்பட்

டார்கள். குழந்தை ஓடிவிளையாடாத அரண்மனை பாழடைந்ததுபோல் அவர்களுக்குத் தோன்றியது. உத்தானபாதனுக்குப் பின்பு இராஜ்யத்தை ஆள யார் இருக்கிறார்கள்? ஒருவரும் இல்லையல்லவா? புத்திரன் ஒருவன் இருந்தாலல்லவோ அரசனுக்குப்பின் அவன் ஆளலாம்.

புத்திரன் இல்லாத வருத்தம் ஜனங்களையும் மிகவும் வருத்தியது. அவர்கள், "உத்தானபாதனே மிகவும் நல்ல அரசன். அவனுக்குப் பிறகு பட்டத்துக்கு யார் வருவது? எவனாவது ஒருவன் பட்டத்துக்கு வந்தால் உத்தானபாதனைப்போல் ஒழுங்காக இல்லாமல் கொடியவனாக இருக்கலாம். நம் உயிரைப்போன்றவன் அல்லவோ நம் அரசன்? பாவம்! இவனுக்கு ஒரு குழந்தையில்லையே! நாம் என்ன செய்யலாம்!" என்று வருத்தப்பட்டார்கள்.

இராணி தன் அறையில் ஒருநாள் துக்கத்துடன் உட்கார்ந்திருந்தாள். அந்த அறை பார்க்க வெகு அழகாய் இருந்தது. அது வெளுப்பான சலவைக் கல்லால் கட்டியது. அதன் நடுவில் ஒரு சிறு நீர்நிலை இருந்தது. நீர், கண்ணாடிபோலத் தெளிவாயிருந்தது. பலவகைப் புஷ்பங்கள் அவ்விடத்தை அழகு செய்தன. சுநீதி, ஜலத்திற்குள் தன் முகத்தைக் கண்டாள். அதில் தன் முகம் முன்போல் இல்லாமல், இளமையும் அழகும் குறைந்திருப்பதைக் கண்டு வருத்தப்பட்டாள்.

அவள் தனக்குள், "ஐயோ! எனக்குக் கிழத்தனம் வருவதாகத் தெரிகிறதே. அழகும் பிரகாசமும் எங்கேயோ போய்விட்டனவே. இத்தனை வயதாகியும், எனக்குக் குழந்தை இல்லையே!" என்று வருந்தினாள்.

அப்போது உத்தானபாதன் சுநீதியிடம் வந்தான். அவன் அவளைப் பார்த்து, "கண்மணி! உன் முகத்தில் ஒளி மழுங்கி விசனக்குறிகள் தோன்றுகின்றனவே. உனக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டான்.

சுநீதி, "அரசே! தங்களை நாயகனாகக் கொண்ட எனக்கு என்ன வருத்தம் ஏற்படக் கூடும்? குடிகள் உங்களை மிகவும் கொண்டாடுகின்றார்கள். உங்களுக்கும் ஊர் ஜனங்களுக்கும் என்னகுறை இருக்கிறதோ அதுவே என்னையும் கஷ்டப்படுத்துகிறது. நமக்கு ஒரு குழந்தை இல்லையே என்றுதான் வருத்தப்படுகிறேன்" என்றாள். மேலும், அவள், "நம் குடிகள், 'அரசிக்குக் குழந்தை பிறக்கவில்லையே, குடிகளிடம் அன்புள்ள தாயாராயிற்றே. நாங்கள் நோயால் வருந்தும் போது எங்களை அடிக்கடி விசாரித்து எங்களுக்கு வேண்டியவற்றை கொடுக்கிறாள். எங்களுக்கு வேறு எவ்வளவோ நன்மை புரிகின்றாள். இப்படிப்பட்ட அரசிக்குக் குழந்தை இல்லையே! அரசனுக்குப்பின்பு பட்டங் கட்டிக்கொள்ள அரசகுமாரன் இல்லையே!' என வருத்தப்படுகிறார்கள். நாதா! நீங்கள் வேறொரு பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ளுங்கள். அவளே அரசியாக இருக்கட்டும். அவளுக்காவது குழந்தை பிறக்கட்டும். நமக்கும் குடிகளுக்கும் உள்ள வருத்தம் நீங்கட்டும். எனக்கு வரவர வயது முதிர்ந்து வருகிறது. ஆதலால் வேறொரு பெண்ணை மணம் செய்துகொள்ளும்படி தங்களை நான் வேண்டிக் கொள்ளுகிறேன்" என்றாள்.

எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்த அரசன், "என் அன்பே! நீ சொல்லுகிறபடி மற்

றொரு பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டால் உனக்கும் அவளுக்கும் சண்டை உண்டாகுமே. அதனால் எனக்கு சந்தோஷம் உண்டாகுமா? துக்கம் உண்டாகுமா? நீயே சொல்லு'' என்றான்.

சுநீதி, "தங்களுக்கு இரண்டாம் மனைவியாக வருபவளுடன் நான் பிரியமாய் இருப்பேன். எப்பொழுதும் அவள் இஷ்டப்படியே நடந்து கொள்வேன். அவளுக்கு என்னால் முடிந்தவரை எல்லா உதவியும் செய்வேன். அவள் தங்களை நேசித்து, தங்கள் இஷ்டப்படி வாழ்வாளானால், அதுவே எனக்கு மிகுந்த சந்தோஷத்தைக் கொடுக்கும். ஒரு சமயம் நான் தனியாக வாழவேண்டியிருந்தாலும், அந்த நிலைமையை வருத்தப்படாமல் ஏற்றுக்கொள்வேன். நமக்கும் குடிகளுக்கும் இருக்கும் கவலை நீங்கவேண்டும் என்பதே என் கருத்து. தங்களை மிகவும் வேண்டிக்கொள்கிறேன். என் எண்ணத்தை நன்றாய் அறிந்த தாங்கள் வேறொரு பெண்ணை மணந்தே தீரவேண்டும்'' என்று பணிந்தாள்.

அதுகேட்ட வேந்தன், "நீ சொல்வது சரியல்ல; நீயே எனக்குப் பிரியமானவள். மற்றொருத்தியை நான் மணக்கவும் வேண்டாம். அவளை மணப்பதால் நீ என்னைவிட்டுப் பிரியவும் வேண்டாம். எல்லாம் கடவுளின் ஆணைப்படியே நடக்கும். ஈசனருள் இருந்தால், உனக்கே ஒரு குழந்தை பிறக்கக்கூடாதா?'' என்றான். இவ்விதம் ஒருவரை ஒருவர் தேற்றிக்கொண்டனர்.

சிலநாட்கள் சென்றன. அரசன் மிகவும் வருத்தத்துடன் இருந்து வருவதை சுநீதி கவனித்துவந்தாள். இரவில் அரசன் தூங்குவ

தில்லை. குழந்தை இல்லையே என்று எப்பொழுதும் ஏங்கியிருந்தான். கவலையினால் அவனுடைய தேகம் நாளுக்குநாள் மெலிந்து வந்தது. ஆதலால் இராணி, "அரசே! தங்களுக்கு உடம்பு அசௌக்கியமா? ஏன் தாங்கள் மிகவும் கவலைப் படுகிறீர்கள்? தாங்கள் இரவில் சிறிதும் தூங்குவது இல்லையே. மனதிற்குச் சந்தோஷமுண்டாக வெளியே சென்று வேட்டையாடி வாருங்கள். அதனால் மனதுக்குத் தேறுதலும், உடம்புக்குச் சௌக்கியமும் உண்டாகும்" என்று சொன்னாள்.

அதற்கு அரசன், "ஆம். நீ சொல்வது நல்லதுதான். இப்பொழுதே வேட்டைக்குப் புறப்படுகிறேன். குதிரைச்சவாரி செய்வதில் எனக்கு அதிகப் பிரியம். செய்தால் தான் மனக்கவலை நீங்கும்" என்றான்.

III

வேந்தன் வேட்டையாடக் காட்டிற்குப் புறப்பட்டான். முன்னே அரசனும், பின்னே பல வீரர்களுமாகச் சென்று காட்டையடைந்தனர். அரசன் காட்டினுள் வெகுதூரம் சென்றுவிட்டான். அவனது வீரர்கள் அவனைத் தொடர்ந்து போக முடியாமல் பின்னே தங்கிவிட்டார்கள். சிறிதுநேரம்சென்றபின் வேந்தன் திரும்பிப்பார்த்தான். தன்பின் வந்த வீரர்களைக் காணவில்லை. ஆனாலும் தனியாகச்சென்றான்.

கொஞ்சதூரம் சென்றதும் மரங்களில்லாத இடம் ஒன்று தோன்றிற்று. அங்கு அரசன் திடீரென ஒரு கூச்சலைக்கேட்டான். அது வந்த வழியே திரும்பிப்பார்த்தான். சிறிதுதூரத்தில் ஒரு பெண்ணைக் கண்டான். அவள் தரையில் விழுந்துகிடந்தாள். அவள், "உதவிசெய்யுங்கள்!

ஐயோ! என்னைக் காப்பாற்ற இங்கு ஒருவரும் இல்லையா?" என்று அலறினள். அவள் அருகில் ஒருவன் இருந்தான். அவன் அவள் கையைப்பிடித்து இழுத்துக்கொண்டு, பக்கத்திலிருந்த குதிரையின் சமீபம் சென்றான். அந்தப் பெண்ணைக் குதிரைமீது ஏற்றிச் செல்லவேண்டும் என்பது அவன் எண்ணம்.

இவற்றையெல்லாம் பார்த்தான் அரசன். அந்தப் பெண்ணைக் காக்க அதிவேகமாகச் சென்றான். அவன் வருவதைக் கண்ட அம்மனிதன், பெண்ணைக் குதிரையின்மீது ஏற்றிக்கொண்டு வேந்தனை எதிர்க்கவந்தான். அரசன் தன் வாளை உருவி அவனை வெட்டிக் கொன்றான். பிறகு, பெண்ணைத் தன் குதிரையின்மீது ஏற்றிக்கொண்டு தன் வழியே சென்றான்.

போகும்பொழுது கன்னிகை அரசனுடைய விலையுயர்ந்த உடுப்புக்களைக் கவனித்தாள். தனக்குள், "இவர் உடுத்தியுள்ள உடையாலும், அணிந்துள்ள ஆபரணங்களாலும், முகத்தில் உள்ள ஒளியாலும், இவர் ஓர் அரசராகவே இருக்க வேண்டும். இவர் முகம் எவ்வளவு அழகாயிருக்கிறது! என் உயிரைக் காப்பாற்றிய இவர் ஓர் அரசனாகத்தான் இருக்கவேண்டும். நல்லது, இனி எனக்கு ஒரு கவலையுமில்லை" என்று மனதைத் தேற்றிக்கொண்டாள். அவள் தன்னைப்பற்றி அவ்வளவு அஞ்சவில்லை. தன் தாய்தந்தையரைப் பற்றிய கவலையே அவளை மிகவும் வருத்தியது.

உத்தானபாதன் பெண்ணை நோக்கி, "குழந்தாய்! உனக்கு இன்னும் பயம் நீங்கவில்லையா? உன்னைத் திருடனிடமிருந்து தப்பிக்கச் செய்தாய் விட்டதே! உன்னை என் அரண்மனைக்கு அழைத்

துச்செல்லுகின்றேன். நான் இந்நாட்டு அரசன். நீ எதற்கும் அஞ்சவேண்டாம்" என்றுசொல்லித் தேற்றினுன்.

சிறுமி, "மன்னவரே! உம்மை அடைந்த பிறகு எனக்குச் சிறிதும் பயமில்லை. என்னைப்பற்றி நான் வருந்தவில்லை; என் பெற்ருேருக்காக என் மனம் வருந்துகிறது. அவர்களைத் தூக்கிச் சென்ற திருடர்கள், ஒருவேளை அவர்களைக் கொன்றிருப்பார்களோ?" என்ருள்.

சிறிதுதூரம் சென்றதும் அரசன் தன்னுடன் வந்து பின்தங்கிவிட்ட வீரர்களைப் பார்த்தான். அவர்கள் இரவில் தங்குவதற்கு ஏற்படுத்தியிருந்த இடத்தையும் கண்டான். குதிரையைவிட்டுக் கீழே இறங்கி, அங்கிருந்தவேலைக்காரன் ஒருவனை அழைத்து, "இந்தப் பெண்ணுக்குவேண்டிய சௌகரியங்களைச் செய்" என்று உத்தரவிட்டான். அப்பெண் அப்பொழுது மிகவும் களைத்திருந்த தால் அரசன் அவளை ஒன்றும் கேட்கவில்லை.

IV

பெண் இரவுமுழுவதும் நன்ருய்த் தூங்கினுள். பொழுதுவிடிந்ததும் படுக்கையைவிட்டு எழுந்தாள். அப்பொழுது வேந்தனிடமிருந்து வேலைக்காரன் ஒருவன் வந்தான். அவன் சிறுமியைப் பார்த்து, "சூரியோதயம் ஆகிவிட்டது அரசனிடம் வந்து உம் வரலாற்றைச் சொல்லலாம்" என்ருன்.

அன்றுகாலை அரசன் வேட்டைக்குப் போகவில்லை. ஒரு மரத்துநிழலில் உட்கார்ந்திருந்தான். சிறுமி வந்ததும், அரசன் அவளைப் பார்த்து, "பெண்ணே! வா. நேற்று இரவு தகுந்த வசதிகள் இருந்தனவா?" என்று கேட்டான். அதைக்

கேட்ட சிறுமி, "எனக்கு என்னகுறை? என் வருத்த மெல்லாம் தங்களை அடைந்ததால் தீர்ந்தது" என்று கூறிப்பணிந்தாள்.

தன் சரித்திரத்தை அறிய அரசன் ஆவலுடன் இருக்கிறான் என்று கண்ட அப்பெண் பின்வருமாறு கூறினாள்: "அரசே! மலைப்பக்கத்திலுள்ள ஒரு நாட்டிற்கு என் தந்தை அரசர். ஒருநாள் என்னுடைய பெற்றோரும் நானும் ஜகந்நாதஸ்வாமியைத் தரிசிக்கப் புறப்பட்டோம். வழியில் ஒரு காட்டை அடைந்ததும் இருட்டிவிட்டது. அப்பொழுது என் தந்தை, 'இங்கேயே இரவைக் கழிப்போம்' என்றார். என் தாயார், 'இங்கே இரவில் தங்குவது கூடாது. திருடர்கள் வந்தாலும் வருவார்கள். வந்தால் பொழுது விடிவதற்குள் நம்மைக் கொன்று நம்மிடம் உள்ள பொருளையெல்லாம் கொண்டுபோவார்கள்' என்றாள். என் தகப்பனாரோ, அவளை நோக்கி, 'நீ எதற்கும் அஞ்சாதே. சீக்கிரம் இரவு கழிந்து விடும். காலையில் நாம் செல்லலாம்' என்று தைரியம் சொன்னார்.

"அன்றிரவு அங்கேயே தங்கினோம். நாங்கள் தூங்கும்பொழுது, என் தாயார் சொன்னது போலவே திருடர்கள் வந்தார்கள். எங்களுடைய வேலைக்காரர்களைக் கொன்றார்கள். அத்துஷ்டர்கள் என் பெற்றோரைக் கைதியாக்கினார்கள். திருடரின் தலைவன் என்னை இழுத்துச் சென்று, ஒரு மரத்தில் கட்டினான். பொழுது விடிந்ததும் என்னைத் தன் குதிரையின்மீது ஏற்றிச்செல்ல முயன்றான். அப்பொழுது நான் கூச்சலிட்டேன். அக்கூச்சலைக் கேட்டுத் தாங்கள் வந்து அவனைக்கொன்று என்னைக் காப்பாற்றினீர்

கள். தாங்கள் வந்திராவிட்டால் என் கதி என்ன ஆயிருக்குமோ! என் உயிரைக்காத்த உமக்கு அநேககோடி நமஸ்காரம்” என்று சொல்லிமுடித்தாள்.

அரசன் தன் வீரர்களை அழைத்து, “இனி நான் வேட்டையாடப் போவதில்லை. இப்பொழுது நகரத்திற்குத் திரும்பிச் செல்வோம். எல்லோரும் புறப்படுங்கள்” என்று கட்டளையிட்டான். உத்தரவுப்படி எல்லோரும் நகரத்துக்குத் திரும்பினர். சீக்கிரம் அரண்மனையை யடைந்தனர். சுநீதி அதிக மகிழ்ச்சியுடன் அரசனை வரவேற்ருள்; அரசனுடன் வந்த சிறுமியைக்கண்டதும் அவளிடம் அன்புகொண்டாள்; அப்பெண்ணின் பெற்ருேருக்குநேர்ந்த நிலைமையைக் கேட்டுத் துக்கித்தாள். அச்சிறுமியை நோக்கி, “உன்னுடைய பெற்ருேர் உயிருடன் இருப்பார்கள். நான் எல்லா நாடுகளுக்கும் ஆட்களை அனுப்பி, கூடிய சீக்கிரத்தில் அவர்களைத் தேடிவரச் செய்கிறேன்” என்று சொல்லித் தேற்றினுள். சிறுமி, “அவர்களை நான் பார்க்கும்வரையில் என் மனம் எவ்வாறு அமைதியடையும்?” என்ருள். இராணி, “உன் பெற்ருேர் அகப்படும்வரையில் என்னுடன் இருந்துவா. அரண்மனை வேலையாட்கள் எப்படியாவது உன் தாய்தந்தையரை அழைத்துவருவார்கள்” என்று சமாதானம் கூறினுள். பெண்ணும் சுநீதியுடன் வசித்துவந்தாள்.

V

இவ்வாறு பலநாட்கள் கழிந்தன. பெற்ருேரைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. ஒவ்வொரு நாளும் அச்சிறுமி தனக்குள், “என் பெற்ருேரை இன்று கண்டுபிடித்துவிடுவார்கள், இன்று கண்டு

பிடித்துவிடுவார்கள்'' என்று நினைத்து, தன்னைத் தானே சமாதானம் செய்துகொள்வாள்.

சாதாரணமாக குழந்தைகளுக்கு ஒன்றும் அதிகநாள் நினைவு இராதல்லவா? அதுபோல வே அச்சிறுமிக்கு நாட்கள் செல்லச்செல்ல, தாய் தந்தையரைப்பற்றிய நினைவு சிறிது சிறிதாக மறைந்துகொண்டேவந்தது. இப்படிப் பலமா தங்கள் கழிந்தன; சில வருஷங்களும் சென்றன. நாளடைவில் சிறுமி தன் பெற்றோரை மறந்து விட்டாள். வருத்தம் மாறி அவள் முகத்தில் புதிய தொரு மலர்ச்சி உண்டாயிற்று. அவள் மேனி யும் பிரகாசம் அடைந்தது.

உத்தானபாதன் நாட்டிற்குச் சமீபத்தில் சில மலைநாடுகள் உண்டு. அவ்விடத்தில் சில கள்ளர் கள் வசித்துவந்தார்கள். அவர்கள் அடிக்கடி நாட்டிற்குள் வருவார்கள். அவர்கள் வாழும் நாடோ, மலைகளும் காடுகளும் நிறைந்திருந்தது. அந்த அடர்ந்த காட்டில் அவர்களைத் தொடர்ந்து செல்ல ஒருவராலும் முடியாது. இந்த மலைநாட் டுக் கள்ளர்கள் உள்நாட்டுக் குடிகளுடைய சொத் துக்களை எடுத்துக்கொண்டு, வீடுகளுக்குத் தீமூட் டித் தங்கள் இருப்பிடம் போய்ச் சேர்வார்கள். அவர்கள் செய்துவந்த கொடுஞ்செயல்களால் ஜனங்கள் மிகுந்த பயமும் துக்கமும் கொண்டி ருந்தார்கள். குடிகள், "நம்மைக் கள்ளரிடமிருந்து காப்பாற்ற அரசனுக்குத் திறமை இல்லையே!" என்று வருத்தப்பட்டார்கள்.

ஒருநாள் உத்தானபாதன், தன்னுடன் சண் டை செய்வதில் தேர்ந்த சிலரைச் சேர்த்துக் கொண்டு கள்ளர் வாழும் இடம் சென்றான். வீரர்கள் மலைகளுக்கு இடையே போகவும் கா

டெங்கும் செல்லவும் நல்ல பாதைகளை உண்டாக்கினார்கள். பிறகு திருடர்களைப் பிடித்தார்கள். அரசன் அவர்களைத் தண்டித்தான். எல்லோருக்கும் புத்திசொல்லி நல்லவர்களாகத் திருப்பினான். காட்டுத்திருடர்கள் ஐந்து வருஷங்களில் சாதாரண ஜனங்களாக ஆய்விட்டார்கள்.

பிறகு அரசனும் தனது வீரர்களோடு நகரத்துக்குத் திரும்பிவந்தான். சுநீதியும் சிறுமியும் அரசனை எதிர்கொண்டு அழைத்தார்கள். சிறுமியும் கலியாணத்துக்குத் தகுந்த வயதை அடைந்தாள். அதனால் அவள் முன்னிலும் அதிக அழகான மங்கையானாள்.

ஐந்து வருஷகாலம் வேந்தன் கள்ளரை அடக்குவதில் மிகவும் சிரமப்பட்டானல்லவா? அவன் சரீரம் மிகவும் இளைத்தது. அவன் உயிருக்கே கெடுதி வருமோவென்று அவனைப் பார்த்தவர் நினைத்தார்கள். அவர் உடம்பு நாளுக்கு நாள் மெலிந்துகொண்டே வந்தது. அரசனை அச்சிறுமி மிகவும் அன்புடன் கவனித்து வந்தாள். இரவும் பகலும் அவன் பக்கத்திலேயே இருந்து வேண்டியவைகளைக் கொடுத்தாள். தன்னுடைய தேகத்திற்குக் கெடுதி உண்டான போதிலும், அரசன் சௌகரியத்திலேயே கவலையுள்ளவளாக இருந்தாள். அவள் உணவு தூக்கம் முதலியவை இல்லாமல் அரசனைக் கவனித்துவருவதைக் கண்டவர், அவளுக்கு எங்கு நோய்வந்துவிடுமோ என்று எண்ணினார்கள். வைத்தியர்கள், "சிறுமி இப்படி இருந்தால் அவளுக்குக் கொடிய நோய்வந்துவிடும்" என்றார். அதைக்கேட்ட மங்கை, "ஐயா என் உயிரைக் காத்த உத்தமபுருஷன் சௌகரியத்தைக் கவனிப்

பது என் கடமையன்ருே? அரசன் இவ்வளவு அசௌக்கியமாயிருக்கும்போது எனக்கு எப்படித் தூக்கம்வரும்? அவருடைய நிலைமை எனக்குக் கவலையை உண்டுபண்ணுகிறது'' என்று கூறினுள்.

அப்பெண் அரசனுக்கு அன்புடன் செய்யும் பணிவிடைகளைச் சுநீதி கவனித்தாள். சீக்கிரத்தில் அரசனுக்கு நோயும் குணமாயிற்று. இராணி அரசனிடம் சென்று, "ஜனங்கள் தாங்கள் நோயால் வருந்துவதைப்பற்றி மிகவும் கவலைகொண்டிருக்கிருர்கள். தங்களுக்குப்பின் பட்டத்துக்கு வர ஒரு புத்திரன் இல்லையே என்ற ஏக்கம் அவர்களுக்கு முன்னிலும் அதிகமாய்விட்டது. கடவுளின் அருளால் தாங்கள் குணம் அடைந்தீர்கள். தலைவரே, இக்கன்னிகை தங்களிடம் எவ்வளவு அன்புபாராட்டி வருகிருள்! இவள் தங்களிடம் காதல்கொண்டிருக்கிருள் என்று எனக்குத்தோன்றுகிறது. ஆதலால் இவளை மணம்புரிந்து கொள்ளுங்கள். இவளுக்குப் பிறக்கும் பிள்ளை தங்களுக்குப்பின் பட்டத்துக்கு உரியவன் ஆவான்'' என்று சொன்னுள்.

அவள் வார்த்தைகளைக்கேட்ட அரசன் மகிழ்ந்து, "அந்தப்பெண் மேலான குணமுள்ளவள். அதுவே அவளுக்குப் பெரிய அழகு. நீயும் அவளிடத்தில் நல்ல எண்ணம் கொண்டிருக்கிருய். ஆகையால், நான் உன் இஷ்டப்படியே அவளைக் கலியாணம் செய்துகொள்கிறேன்'' என்று கூறினுன். அவ்வாறே, அப்பெண்ணை அரசன் மணந்தான். அவள் சுருசி எனப் பெயர் பெற்ருள். அரசன் சுருசியைக் கலியாணம் செய்துகொண்டதில், சுநீதிக்கு அளவில்லாத சந்தோஷம் உண்டாயிற்று. ஆனுல் குடிகள்மட்

டும் சந்தோஷிக்கவில்லை. அவர்கள் இந்தப் புதிய இராணி யார்? இவளைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரியாதே! இவள் குலகோத்திரங்களைப்பற்றியும் நமக்கு ஒன்றும் தெரியாதே. காட்டிலிருந்து அழைத்துவந்த பெண்ணுகையால் இவள் எந்த ஜாதியைச் சேர்ந்தவளோ என்று சந்தேகமாயிருக்கிறதே. அரசகுமாரியைக் கலியாணம்செய்து கொள்வதுதானே அரசருக்குக் கௌரவம்" என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.

## VI

இது நிற்க, சில நாட்களுக்குப்பின் சுநீதி கர்ப்பம் தரித்தாள். அதை அறிந்ததும் அரசனுக்கு உண்டான சந்தோஷத்திற்கு அளவே இல்லை. ஆனால் சுருசி மகிழ்ச்சி அடையவில்லை. சுநீதிக்குக் குழந்தை பிறந்தால், அரசன் முன் போல் தன்னை நேசிக்கமாட்டானே என்று அவள் பயந்தாள். அரசனுக்குத் தன்னிடம் உள்ள அன்பு குறையாமல் இருக்கும்படி பலவித உபசாரங்கள் செய்தாள். அரசனும் இளையமனைவியின்மேல் அதிக அன்பு கொண்டான்.

சுநீதிக்கு நல்ல வடிவும் அழகும் வாய்ந்த ஆண்குழந்தையொன்று பிறந்தது. அதற்குத் துருவன் எனப்பெயரிட்டார்கள். அரண்மனையிலுள்ள வேலைக்காரர்கள் எல்லோரும், அளவில்லாத மகிழ்ச்சி அடைந்தார்கள். ஜனங்களும் அதைக்கேட்டு சந்தோஷத்தினுல் பூரித்தார்கள்; தெருக்களைத் தோரணங்களாலும் மலர்களாலும் அலங்கரித்தார்கள். இரவில் வீடுகளில் வரிசையாக விளக்குகள் ஏற்றிவைத்தார்கள். அவற்றை எல்லாம் பார்த்து சுருசி மிகவும் வருத்தம் அடைந்தாள். சுருசி, "ஐயோ! மூத்தவளுக்குக்

குழந்தை பிறந்துவிட்டதே! அது பெண்ணாக இருக்கக்கூடாதா? அதுவுமில்லை. இராஜ்யத்தை அவள்மகன்தானே ஆளுவான். நாம் என்ன செய்வது?'" என்று வருந்தினாள். சுருசிக்கு உண்டான பொறாமைக்கு அளவே இல்லை. விலை உயர்ந்த தன் உடைகளையும் நகைகளையும் கழற்றி வீசி எறிந்தாள். கந்தைகளைச் சுற்றிக்கொண்டாள். தலைமயிரை அலங்கோலமாக ஆக்கிக் கொண்டாள். ஒரு மூலையில் உட்கார்ந்து, "நான் பிச்சை எடுத்துச் சாப்பிடும் ஒரு ஏழையாய்ப் பிறந்திருக்கக்கூடாதா? அல்லது நான் கள்வர்கையால் அன்றே இறந்திருக்கக்கூடாதா? எனக்கு இராணி என்ற பெயரும் வேண்டாம். அதனால் இந்த அவமானமும் வேண்டாம்" என்று புலம்பினாள்.

அந்தசமயம் சுருசியின் அறைக்குவந்த அரசன், அவள் அலங்கோலத்தைக் கண்டான். அவளைப்பார்த்து, "நீ ஏன் உன் ஆடை ஆபரணங்களைக் களைந்து விட்டாய்? நீ தரையில் கிடந்து, 'நான் சாகமாட்டேனா?' என்று ஏன் வருந்துகிறாய்? உனக்கு வந்ததுன்பம் என்ன? இந்த அரண்மனைக்கு நீ தான் இராணி ஆயிற்றே" என்றான்.

அந்த வார்த்தைகளைக்கேட்ட சுருசி, "நானா இராணி! எவர் தான் நம்புவர்? மூத்தவளிருக்க எனக்கு அப்பெருமை எப்படி உண்டு? உண்மையில் அவளே ராணி. அவளுக்குத்தான் எல்லாப் பெருமைகளும் உண்டு. எனக்கு ஊர் உண்டா? பேர் உண்டா? நானும் ஒரு ராஜகுமாரியா? ஏதோ காட்டில் பிடித்துவந்த ஒரு ஜந்துதானே. உங்களுக்கு என்மேல் பிரியமேற்படுமா? ஏற்படவேமாட்டாது. சுநீதி இருக்கிறாள். அவளுக்குப் ஒருபிள்ளை

பிறந்துவிட்டது. ஒன்றும் தெரியாத நான் உங்களை நம்பிவிட்டேன். எனக்கு எவ்வளவு வருத்தமும் அவமானமும் வந்தாலும் நீங்கள் தான் கதி என்று இருக்கவேண்டியிருக்கிறது. என் தலைவிதி திருடர்கையில் அகப்பட்டநாள் அன்றே ஒழிந்திருக்கக்கூடாதா? இவ்வளவு வருத்தத்தை அனுபவிக்கவேண்டியிருக்கையில் எனக்கு சாவு எப்படி ஏற்படும்?" என்று பலவாறு தன்னைத் தானே இழிவாகப் பேசிக்கொண்டாள்.

இப்படி சுருசி சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே, சுநீதி அங்குவந்தாள். சுருசிசொன்ன வார்த்தைகளைக்கேட்டாள். உடனே சுருசியை அணைத்துக்கொண்டு, "சகோதரீ! நீ துக்கப்படுவதற்கு காரணம் ஒன்றும் இல்லையே. ஆடை ஆபரணம் அனைத்தையும் கொடுக்கின்றேன். நீயே எடுத்துக்கொள். நான் இப்பொழுதே புறப்பட்டு எங்கேயாவது போகிறேன். அரசனும் நீயும் சௌக்கியமாக வாழுங்கள். நான் உனக்கு ஒரு நாளும் கெடுதலை நினைக்கமாட்டேன். நீ வாழ்வதால் எனக்கு எப்பொழுதும் ஆனந்தமே" என்று சொல்லிவிட்டுத் தன் இருப்பிடம் சென்றாள்.

அரசன் கொஞ்சநேரம் ஒன்றும் தோன்றாதவனானன் பின்பு அவன் அவளைப் பின்தொடர்ந்து சென்றான். ஆயினும் அவள் அவன் கண்ணில் அகப்படவில்லை. அன்று முழுதுமே அரசன் சுநீதியைப் பார்க்கவில்லை. அரசனுக்கு வருத்தம் மிகுந்தது. அவன் ஒரு சேவகனை அழைத்து, "சுநீதி எங்கே?" என்று கேட்டான் சேவகன், "நான் பார்த்து வருகிறேன்" என்று வணக்கமாகச் சொல்லிச்சென்றான்.

சேவகன் உடனேசென்று சிறிதுநேரம் கழித்துத் திரும்பிவந்தான். அவன் அரசனை வணங்கி, "ராணியை அரண்மனையில் தேடினேன். எங்கும் காணவில்லை. அரசி இருக்கும் இடம் ஒருவருக்கும் தெரியவில்லை" என்று கூறினான்.

சுநீதியின் அரண்மனையில் கிழவி ஒருத்தி இருந்தாள். அவள் சுநீதியின் வளர்ப்புத்தாய். குழந்தைப்பருவமுதல் சுநீதியைக் காப்பாற்றிவந்தவள் அரசன் அக்கிழவியை அழைத்து, "நீ குழந்தைப்பருவமுதல் சுநீதியைப் பிரியாதவளல்லவா? அவள் இருக்கும் இடம் உனக்குத் தெரிந்திருக்குமே. சுருசியின் அறையில் சுநீதியைப் பார்த்த அன்றுமுதல் இன்றுவரையில் நான் அவளைக் காணவில்லையே!" என்று தன் வருத்தந் தோன்றக்கேட்டான்.

கிழவி, "மகாராஜனே! நேற்று இரவு நான் அரசியைப்பார்த்தேன். அவள் வேறு இடம் போவதாக என்னிடம் உரைத்தாள். அப்பொழுது நான், 'என்னையும் அழைத்துச்செல்லுங்கள்' என்றேன். 'என்றும் பிரிந்திராத என்னைத் தனியாகவிடலாகாது' என்றும், 'என் வாழ்நாள் முழுதும் தங்களுடன் வாழ்ந்தே கழிப்பேன்' என்றும் முடிவாகத் தெரிவித்துக்கொண்டேன். ராணியோ, 'நீ கூடவரக்கூடாது. என் குழந்தையே என்னுடன் வரத்தகுந்தவன். இதுவே யான் உன்னைக் கடைசி முறையாகப் பார்ப்பதும் பேசுவதும். நான் செல்லும் இடத்தை எவரும் அறியாமலிருக்கவேண்டியது' என்று கூறிச்சென்றாள். அரசே! எனக்குத் தெரிந்தது இவ்வளவுதான். அவள் சென்ற இடம் எனக்குத் தெரியாது. இவ்வாறு தங்களையும், அரண்மனையையும்விட்டுப் போவா

ளென்று எவரும் நினைக்கவே இல்லை. நானும் அவளைப் பிரிந்து உயிர்வாழ்வேனென்று இது வரை நினைக்கவில்லை'' என்று சொல்லி முடித்தாள்.

சுருசி இதைக்கேட்டு மிகவும் சந்தோஷ மடைந்தாள். தன் எண்ணமெல்லாம் நிறைவேறி விட்டதென்று நிச்சயித்துக்கொண்டாள். தனக் குப் பிறக்கும் பிள்ளையே பட்டம் பெறுவானென் றும் சந்தோஷித்தாள். சுநீதி அரண்மனையை விட்டுப்போன விஷயம் அவள் ஒருத்திக்குமட் டும் அளவற்ற சந்தோஷத்தைக்கொடுத்தது.

## VII

சிலநாட்கள்சென்றதும் சுருசிக்கும் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு உத்தமன் என்று பெயர் வைத்தார்கள். சுநீதியின் புதல்வ னை துருவன் பிறந்தநாளில் குடிகள் சந்தோஷத் துடன் அத்தினத்தைக் கொண்டாடினார்கள் அல் லவா? அதைப்போல் சுருசியின் புதல்வன் உத்த மன் பிறந்ததினத்தைக் கொண்டாடவில்லை. தனக் குப் பிள்ளை பிறந்ததற்கு ஜனங்கள் ஏன் கொண் டாடவில்லை என்று சுருசி அவர்களிடம் கோ பங்கொண்டாள். அவள் அரசனிடம்சென்று, "தலைவரே! நான் ஓர் ஆண் குழந்தையைப்பெற் றது குடிகளுக்குப் பொறுக்கவில்லை! துருவனைக் கொண்டாடிய ஜனங்கள் என் பிள்ளையைக் கொண்டாடவில்லையே! என் பிள்ளை ஒரு காட் டுப்பெண்ணுக்குப் பிறந்தவன்தானே. முன்பு தாங்கள் என்னை 'ராணி' என்று அழைத்ததும், 'ராணியும் வருந்துவாளா' என்று என்னைக்கேட் டதும் ஞாபகமிருக்கலாம். தாங்கள் ராணியாக நினைத்த எனக்கும், என் வயிற்றிற் பிறந்த புத்திர

னுக்கும் குடிகள் பாராட்டும் பெருமை மிகவும் நன்ருயிருக்கிறது!'' என்ருள்.

அரசன் ஒன்றும் தோன்ருதவனுய் அவளிடத்தில் வைத்த அன்பினுல் தன்னையும் மறந்தவனுனன். அவளுக்குச் சந்தோஷம் உண்டாக வீதிகளை அலங்கரித்து அந்நாளை நல்லநாளாகக் கொண்டாட உத்திரவிட்டான். வேலைக்காரர் அவன் கட்டளையை ஏற்று வீதியெங்கும் அலங்கரித்தார்கள். குடிகளுக்கோ அச்செய்கை விருப்பத்தைத்தரவில்லை. அவர்கள், "சுநீதியே எங்கள் ராணி. குழந்தை துருவனே எங்கள் அரசன்'' என்ருர்கள். சேவகர்கள், "எங்களுடைய எண்ணமும் அதுவே, ஆனுலும் அரசன் ஆணைக்கு அடங்க வேண்டியவர்களாயிருக்கிருேம்'' என, குடிகள் முன்னிலும் அதிகமாக நகைத்தார்கள். "இளையராணியின் மகிழ்ச்சிக்காக நாம் ஏன் கொண்டாடவேண்டும்?'' என்று இகழ்ந்தார்கள்.

இவற்றையெல்லாம் அறிந்த சுருசி கோபமும் வருத்தமும் கொண்டாள். அச்சமயம் வேகமாக அவளிடம் ஒரு வேலைக்காரன் வந்தான். அவன் அவளை நோக்கி, "காட்டிலிருந்து ஒருவன் வந்திருக்கிருன். அவன் சுநீதியிடமிருந்து ஒரு கடிதம் கொண்டுவந்திருப்பதாகச் சொல்லுகிருன்'' என்ருன்.

ராணி வந்தவனை உள்ளே வருவித்தாள். அவன் ராணியிடம் கடிதத்தைக் கொடுத்தான். அக்கடிதத்தில், "அன்புள்ளவளே! என் சகோதரியே! உனக்குப் புத்திரன் பிறந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். நான் அளவிலாச் சந்தோஷமடைந்தேன். மங்களகரமாக மலர்களை அனுப்பி இருக்கிறேன் அவற்றை அன்புடன் ஏற்றுக்

கொள். குழந்தை எல்லாப் பெருமைகளையும் பெற்றுவாழ கடவுளைப் பிரார்த்திக்கின்றேன் நீ அடைந்த பாக்கியத்தை உன் பக்கத்திலிருந்து சந்தோஷிக்க முடியாமற்போன என் நிலைமைக்கு வருந்துகின்றேன்" என்று எழுதியிருந்தது.

## VIII

குழந்தைகளே! சுநீதி எங்கு வசித்துவந்தாளென்பது உங்களுக்குத்தெரியுமா? அவள் மரங்கள் அடர்ந்த ஒரு காட்டில் தன் சிறு குழந்தை துருவனோடு வாழ்ந்து வந்தாள். அவர்கள் இருந்த இடம் எங்கும் பசுமையான மரங்களும், பல நிறமுள்ள மலர்களும் நிறைந்து இருந்தது. துருவனோ இளங்குழந்தை. அவன் தன் குழந்தைப்பருவத்திற்குரிய விளையாட்டால், தாயின் துக்கத்தை மாற்றிவந்தான்.

சிலமாதங்கள் சென்றன. துருவனும் வர வரப் பெரியவனானன் அவன் தவழ்ந்தும் தளர் நடையிட்டும், தன்தாயைச் சந்தோஷப்படுத்தி வந்தான் குழந்தையின் முகத்தைக்கண்டால் கோடி துக்கமும் தீருமல்லவா! சுநீதி தன் புத்திரன் விளையாட்டால் எல்லாக்கஷ்டங்களையும் மறந்தாள். தன் புத்திரனின் சந்தோஷமுகத்தினால் தானும் சந்தோஷமடைந்தாள். துருவனுக்குப் பசுமையான இலைகளையும் பலவர்ணமுள்ள மலர்களையும் பார்க்க அதிகப்பிரியம். அவன் பூமியில் படுத்தபடியே நீலநிறமான ஆகாயத்தை மேல்நோக்கிப்பார்ப்பான். பறவைகள் பாடுவதைக்கேட்டுக் களிப்பான். அவைகள் ஆகாயத்தில் பறந்துசெல்லும்பொழுது அதைக்கண்டு கூத்தாடுவான்.

இப்படியிருக்கும்பொழுது ஒருநாள் தன் தாயிடம்சென்று, "அப்பா எங்கே இருக்கிறார்?" என்று கேட்டான். சுநீதி, "உன்பிதா அடுத்த நகரத்தில் இருக்கிறார்" என்றாள். துருவன், "அவர்யார்?" என்று கேட்டான்.

சுநீதி சற்று யோசித்தாள். பிறகு அவள், "அவர் இந்த நாட்டு அரசன்" என்றாள் துருவன் தன் தாயைப்பார்த்து, "அம்மா! அப்படியா? அரசன் மனைவியாய் இருந்து நீ இம்மாதிரி தனியாக இருப்பானேன்? நான் அவரைப்பார்க்க விரும்புகிறேன். அவரைப்பார்ப்பது எப்படி?" எனப் பணிவுடன் கேட்டான். சுநீதி தன் குழந்தைசொன்ன அழகான வார்த்தைகளைக்கேட்டு மனங்குளிர்ந்தாள். இருகைகளாலும் வாரியெடுத்து துருவனைத் தன்மார்போடு அணைத்துக் கொண்டாள். "ஐயோ! குழந்தை சுருசி இருக்குமிடம்போக வேண்டுகிறானே. குழந்தையென்றும் அவள் நினைப்பாளா? ஒருபாவமும் செய்யாத என்னையே தூஷித்தவளாயிற்றே! பொதுவில் குழந்தை என்று இரங்கினாலும் என் குழந்தை என்று அறிந்தால் என்னசெய்வாளோ? ஐயோ குழந்தை போகாமலிரானே" என்று தனக்குள்ளேயே வருந்தினாள். முடிவில் அவன் போகவேண்டிய வழியைச் சொன்னாள். துருவன் தந்தையைக் காண வேண்டுமென்னும் விருப்பத்தினால் தன் தாயை ஒருவாறு தேற்றிவிட்டுப் புறப்பட்டான். நேரே அரண்மனைக்குவந்து சேர்ந்தான். அங்கே ஒரு சேவகன் காவலாக நின்றுகொண்டு இருந்தான். சேவகன் அவனைப்பார்த்து, "இது அரண்மனை; இந்த வழியாக ஒருவரும் செல்லக்கூடாது" என்று சொல்லி துருவன் உள்ளேபோவதைத் தடுத்தான்.

துருவன் தான் சுநீதியின் பிள்ளை என்றதும் சேவகன் மறுமொழி சொல்லாமல் உடனே அவனைப்போகவிட்டான். துருவன் ஒரு பெரிய மண்டபத்துக்கு வந்துசேர்ந்தான் அவன் தகப்பனார் சிங்காதனத்தில் உட்கார்ந்திருந்தார். அவர் மடிமீது உத்தமன் இருப்பதை துருவன் கண்டான். அவன் தன்னிடம் வருவதை அரசன் பார்த்தான். அவன் உத்தமனை கீழே உட்கார வைத்துத் துருவனை அணைத்துத் தழுவவிரும்பி தன் இருகைகளையும் நீட்டினான். துருவனும் தன் தந்தையின் முகத்தைப் பார்த்துக்கொண்டே ஓடிவந்தான். அந்தச்சமயம் துருவனைப்பார்த்ததும் சுருசிக்குக் கோபமுண்டாயிற்று. அவள் முகம் சிவந்தது. அவள் துருவனை இமைகொட்டாமல் பார்த்தாள். குழந்தை துருவன் மனங் கலங்கி ஒன்றும் தோன்றாமல் நின்றான்.

சுருசி துருவனை நோக்கி, "அடே! நீ சிறுவன். உன் எண்ணம் உன் வயதிற்கும் சக்திக்கும் தகுந்ததாக இல்லை. ஏன் வீண்பெருமைகொள்ள நினைக்கிறாய்? அரசன் மடியில் என் செல்வப் புதல்வனைப்போல் நீயும் உட்கார விரும்புகின்றாயோ? சுநீதி வயிற்றிற் பிறந்த உனக்கு அது கிடைக்குமோ? உன் எண்ணம் நிறைவேறவேண்டுமானால் என் வயிற்றிற் பிறப்பதற்குத் தவம் செய்யவேண்டும்" என்று மிகக் கோபமாகச் சொன்னாள்.

துருவன் தந்தையின் முகத்தை நிமிர்ந்து பார்த்தான். உத்தானபாதன் சுருசிக்கு விரோதமாக நடக்கப் பயப்பட்டான். அவள் அவ்விதம் அரசனைச் செய்துவைத்து இருந்தாள். துருவனிடத்தோ அவனுக்கு இரக்கம் உண்டாயிற்று; அவன் ஏதேனும் குழந்தைக்குச் சமாதானம்

சொன்னால் சுருசி தன்னைக் கோபிப்பாளோ எனப் பயந்தான். ஆகையால் தலைகுனிந்து பேசாமலிருந்தான். குழந்தையாயிருந்தாலும் நல்ல புத்தியுடையவனல்லவா துருவன்? அங்கிருந்தால் தனக்கு இன்னும் கெடுதி உண்டாகுமென்று நிச்சயித்து அரண்மனையை விட்டு வெளியே சென்றான்.

## IX

அப்பொழுது தன்னை ஆதரிப்பவள் தாயார் ஒருத்தியே என்று நினைத்து அவளிருக்கும் இடத்திற்குக் கண்ணுங்கண்ணீருமாய் ஓடிவந்தான். மலர்ந்த முகத்துடன் சென்ற தன் குழந்தை வாடியமுகத்துடன் வருவதைக் கண்டாள். சுநீதி அவனைக் கட்டித்தழுவி பல சமாதானங்கள் சொல்லித் தேற்றினாள். துருவனோ விம்மி விம்மி அழுது தனக்கு அரண்மனையில் நேர்ந்த அவமானத்தைத் தாயாரிடம் சொன்னான். அவன் சுருசி சொன்ன கொடிய வார்த்தைகளை நினைத்து நினைத்து வருந்தினான். அவனுடைய மனம் எந்த விளையாட்டிலும் செல்லவில்லை. சுநீதி தன் பாலன் மனவருத்தத்துடன் இருப்பதைக் கண்டாள். அவள் அவனை நோக்கி, "குழந்தாய்! ஏன் வருத்தப்படவேண்டும்? அதனால் ஏதாவது பயன் உண்டோ? வருத்தத்தால் ஒன்றும் சாதிக்க முடியாது. ஒருவனுக்கு நல்லதோ, கெட்டதோ, சந்தோஷமோ, துக்கமோ, எல்லாம் போன ஜன்மத்தில் தான் செய்த தவத்திற்குத் தகுந்தபடிதான் ஆகும். குழந்தாய்! வருத்தப்படாதே. உன்னுடைய சிரித்த முகத்தைப் பார்த்தல்லவோ நான் சந்தோஷமடையவேண்டும். நீ வருந்துவாயானால் எனக்குவருத்தம் உண்டாகாதா?" என்

ருள். துருவன் தனக்காகத் தாயார்படும் கஷ்டத்தைப் பார்க்கச் சகியாமல் திடீரென்று எழுந்து மரங்களின் இடையில் ஓடினன். சுநீதி, "குழந்தாய், விளையாடப் போகிருயா?" என்று கேட்டாள். துருவன், "இல்லை; தாங்கள் எனக்கு உபதேசம் செய்த ஸ்ரீமந் நாராயணனைத் தரிசித்து அவரருளைப் பெறப்போகிறேன். என்மனம் அவரைப் பார்ப்பதில் ஆசை கொண்டுவிட்டது. அம்மா! என்னை ஆசீர்வதித்து அனுப்பவேண்டும்" என்று பணிந்தான்.

சுநீதி, "நீ ஏன் அப்படிச் சொல்கிருய்? எதற்காக நீ நாராயணனைத் துதிக்கிருய்?" என்று கேட்டாள்.

துருவன், "தாயே! எல்லாம் உலகத்தில் 'ஆவதும் பெண்ணலே" அழிவதும் பெண்ணலே' என்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறேன். என் தகப்பன் ஓர் அரசனுயிருந்தாலும் என்னைப் பிரியத்துடன் அழைக்க முடியவில்லை அல்லவா? அது ஏன்? என் இளைய தாயாரான பெண்தான் காரணம். ஆனல் அவள் சொன்னபடி செய்து அவள் பிரியத்தை அடையப்போகிறேன். நான் அரசகுமாரனல்லவா? எடுத்த காரியத்தை முடிப்பதல்லவா அரசருக்கு அழகாகும்? என் எண்ணமும் தந்தையின் எண்ணமும் நிறைவேற எங்கும் நிறைந்த அப்பரம்பொருளைத் தரிசிப்பேன். இது நிச்சயம். தாயே! சிறியதாய் சொல்லிய சொற்கள் என் நெஞ்சைப் பிளக்கின்றன. அம்மா, நினைத்தால் மனம் கொதிக்கிறதே! நான் எவ்வாறு பொறுப்பேன்? அனுமதி கொடுங்கள். ஆசீர்வதியுங்கள்" என்ருன். சுநீதி தன் குழந்தையின் மழலைச்சொல்லைக் கேட்டு அவனைப் பார்த்து,

"என் கண்ணே! என் முத்தே! என் மனம் பூரிக்கச் செய்யும் உன் வார்த்தைகளை நான் என்னவென்று சொல்வேன்! உன் மழலைச்சொற்களைக் கேட்காமலும் உன் அழகிய முகத்தைப் பார்க்காமலும் எப்படியடா நான் ஒரு நொடிப்பொழுது கூட உயிருடன் இருப்பேன்! குழந்தையன்றோ நீ? ரிஷிகளும் காணமுடியாத கடவுளை எப்படியடா நீ காண்பாய்? ஆத்திரப்படுகிறாயே! சொன்னாலும் கேட்காமல் பிடிவாதங்கொண்டு நிற்கிறாயே! நீ சுருசியின் பிள்ளையாகவும் வேண்டாம். குழந்தை என்றும் பாராமல் தூஷித்ததற்கு காரணமாயிருந்த அந்த அரசும் வேண்டாம். என் கண்ணே, என் பக்கத்திலேயே இரு" என்று சொன்னாள்.

துருவன், "அம்மா! ஸ்ரீமந்நாராயணன் கருணைக்கடவுளல்லவா? உங்களுக்கு இது தெரியாத விஷயம் அல்ல. அப்படியிருக்க அப்பெருமான் எனக்கு இரங்கமாட்டாரா? அம்மா! அவருடைய அருள் எனக்கு அவசியம் கிடைக்கும். எனக்குப் போக தயைசெய்து விடைகொடும். தங்கள் ஆசீர்வாதம்பெற்ற பின்பும் எனக்கு ஆகாத காரியம் ஒன்று உண்டோ?" என்றான்.

அவன் இனிய மொழிகளைக் கேட்ட சுநீதி சந்தோஷித்து, "குழந்தாய்! விரும்பியபடியே நாராயணனை நீ வழிபடு. உனக்கு அவருடைய அருள் கிடைக்கட்டும். உன் எண்ணம் நிறைவேற அவரிடம் வேண்டும் வரங்களைப் பெற்றுக் கொள். நீ சிறந்த நீதியுள்ள அரசனாக ஆவாய். போய்வா" என ஆசீர்வாதம் செய்தாள். துருவன், "எம்பெருமானே! என் தாயாருக்குத் துணை தாங்களே. அவளைத் தாமே காக்கவேண்டும்"

என்று திருமாலைத் தொழுதான். சிறு வீட்டில் இருந்த தன் தாயைத் தனியே விட்டான். திருமாலைக்குறித்துத் தவம்செய்யப் புறப்பட்டான்

X

துருவன் வீட்டைவிட்டுச் சென்றான். தன் தாயையும் பிரிந்தான். காட்டிற்குள் வெகுதூரம் சென்றான். போகும்போது, "எப்படி யான் நாராயணனைப் பார்ப்பேன்? அவர் எந்த உருவத்தோடு எனக்குக் காட்சிகொடுப்பார்? மனித உருவங் கொள்வாரோ? வேறு எந்த உருவம்கொள்வாரோ? இரவில் நடுச்சாமத்தில் நான் நன்றாக தூங்கும்போது வருவாரோ? இருண்டகாட்டில் வரும்பொழுதே வருவாரோ?" என்று பலவிதமாகத் தனக்குள் யோசித்துக்கொண்டே பகலெல்லாம் நடந்துசென்றான். சிறிதுநேரத்திற்கெல்லாம் இருள் எங்கும் மூடிக்கொண்டது. திடீரென ஒரு சப்தத்தைக் கேட்டான். சற்று மயங்கிநின்றான். அவ்விருட்டில் மிக்கப் பிரகாசமுள்ள இரு கண்களின் ஒளி தன்னிடம் நெருங்கிவருவதைக் கண்டான். திருமாலையே நினைத்துச் செல்லும் துருவன் அத்திருமாலே வந்துவிட்டதாக நினைத்து, "பெருமாளே! எனக்கு அருள்செய்யலாகாதா?" என்றான். அவ்வொளியே ஒரு புலியின் கண்களிலிருந்து உண்டானது. அப்புலி அவன்முன்னே நின்றது. துருவனும் அதைத் திருமாலென நினைத்து அதைத் தழுவ தன் இருகைகளையும் கூப்பி வணங்கி, "எனக்கு அருள்செய்தல் வேண்டும்" என்று சொன்னான். ஸ்ரீமந்நாராயணனை தியானம் செய்பவர்கட்கு ஒரு கெடுதியும் நேராது. புலி அவனிடம் வருவதற்குப் பயந்து வந்தவழியே ஓடிப்போய்

விட்டது. துருவன் பிறகு அப்பெருமாளை மன திலேயே வைத்துக்கொண்டு தன்வழியே சென் ருன். பொழுதும் விடிந்தது.

துருவன் காட்டைத்தாண்டி மலைகளின்மேல் ஏறிச்சென்ருன். சூரியனும் உதயமாஞன். குளிர்ந்த காற்று வீசிற்று. அது அவனுக்குப் புதிய பலத்தையும் உற்சாகத்தையும் கொடுத்தது. மலர்கள் நல்ல மணத்தை வீசிக்கொண்டிருந்தன.

அவ்விடத்தில் அடர்ந்து தழைத்து வளர்ந்த பெரியமரம் ஒன்று நின்றது. அந்த மரத்தடி மிக வும் குளிர்ச்சிபொருந்திய இடமாகவிருந்தது. துருவன் இரவுமுழுவதும் நடந்த களைப்பால் அம்மரத்தடியில் படுத்தான். பின்பு நன்ருகத் தூங்கிவிட்டான். சூரியன் ஒளி வரவர அதிக மாக ஆயிற்று. அப்போது சில பெண்கள் குடங் களை எடுத்துக்கொண்டு வந்தார்கள். புருஷர் களும் வயல்களில் வேலைசெய்யப் புறப்பட்டார் கள். வெயில் அதிகமாயும் மரத்தடியில் நிழல் குறைந்தும் இருந்தது. ஆண்மக்கள் தங்கள் வேலைகள் முடிந்தபிறகு வீட்டுக்குத் திரும்பிச் சென்ருர்கள் சூரியனும் மேற்குதிசையில் சாய்ந் தான். வெயில் பொன்னிறமாயிருந்தது. அவ் வளவு நேரமாகியும் துருவன் எழுந்திருக்க வில்லை.

அப்பொழுது அங்கு நாரதர் வந்தார். துரு வனுக்குப் பக்கத்தில் வந்துநின்ருர். அவன் தலைமேல் தன் கையை வைத்தார். துருவன் தூக்கத்தில் சற்று அசைந்தான். நாரதர் அவன் கையைப் பிடித்துக்கொண்டார். திடீரென்று துருவன் எழுந்திருந்து, "ஹரியே! உம்மையா நான் பார்க்கிறேன்!" என்ருன்.

நாரதர் அவனை நோக்கி, "குழந்தாய்! நீ யார்? நீ ஏன் திருமாலைத் துதிக்கிறாய்? சிறுவனாகிய உனக்கு ஹரிபஜனை எதற்கு?" என்று கேட்டார்.

துருவன் நன்றாய்த் தூக்கம் தெளிந்து, "ஸ்வாமி! நான் என் தாயையும் வீட்டையும் விட்டு வந்திருக்கிறேன். ஸ்ரீமந்நாராயணனைத் தரிசனம் செய்ய விரும்புகிறேன். நான் அவரை எப்படி எவ்விடத்தில் பார்க்கமுடியும்? இச் சிறுவனுக்கு இரங்கி அருள்செய்யுங்கள்" என்று அவரை வேண்டினான்.

நாரதர் மிக்க ஆச்சரியம்கொண்டு, "நான் எப்படி அவரைக் காட்டமுடியும்? நானும் அவரைக்காண ஆவல்கொண்டிருக்கிறேன். எத்தனையோ பெரியோர்கள் அநேக வருஷங்களாகத் துதித்தும் தவம்செய்தும் அவரைக்காண அவர்களாலும் முடியவில்லை. நீயோ சிறுவன். உன்னால் அவரை எப்படிப் பார்க்கமுடியும்?" என்றார்.

துருவன், "நான் பகவானைப் பார்த்தே தீருவேன். அவரைப் பார்க்காமல் என்னால் சிறிது நேரமும் இருக்க முடியாது" என்றான்.

நாரதர் மிக்க வியப்புற்று, "குழந்தாய்! உன்னால் தவம்செய்ய முடியாதே. நீ கொண்ட எண்ணத்தை விட்டுவிடு. நீ விளையாட்டிலே புத்தியைச் செலுத்து" என்றார்.

நாரதர் கூறியமொழிகளைக் கேட்டும் துருவன் மனம் தளராது, "தவம்செய்து திருமாலைக் கண்ட பின்பு தான் வீட்டிற்குத் திரும்புவேன். இது உண்மை. நான் நீதியும், பலமும், தருமமும் உள்ள வேந்தனாகும்படி அவரிடம் வரம்பெறுவேன். அதற்குத் தகுந்தவழியைத் தாங்கள் தான் காட்டி

யருளவேண்டும்" என்று சொல்லி அவருடைய பாதங்களில் வீழ்ந்து பணிந்தான். துருவனது மன உறுதியைக் கண்ட நாரதர் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். அவர் அவனைப் பார்த்து, "குழந்தாய்! யமுனை நதிக்கரையிலுள்ள மதுவனத்திற்குச் செல். அங்கு இருந்துகொண்டு திருமாலைக் குறித்துத் தவம்செய். அவர் தரிசனம் கொடுத்து அருள்புரிவார்" என்று சொல்லிப்போனார்.

துருவன் மதுவனம் சென்றான். ஆற்றங் கரையிலுள்ள ஓர் மரத்தின் கீழ் ஒரு கற்பாறை இருந்தது. அதன்மேல் உட்கார்ந்தான். ஒன்றையும் நினையாது பரந்தாமனது திருவடிக்கமலங்களையே நினைத்துத் துதித்தான். ஆகாரம் சாப்பிடவில்லை. நீரும் அருந்தவில்லை. பகல், இரவு என்றும், பனி, வெயில் என்றும், காற்று, மழை என்றும் நினைக்காமல் ஒரே நிலையிலிருந்து கொண்டு கடுந்தவம் செய்தான். கடைசியாக ஓர் இரவு பெருங்காற்று அடித்தது. மரங்களெல்லாம் விழுந்து விடும்போல் அசைந்துகொண்டிருந்தன. பெரியமழை பெய்தது. ஆற்றில் வெள்ளம்பெருகிக் கரை புரண்டு ஓடிற்று. துருவன் தவம் செய்துகொண்டு இருந்தபாறையையும் சூழ்ந்துகொண்டது. ஆயினும் தான் இருந்த இடத்திலேயே உறுதியாக நின்ற துருவன் ஒன்றையும் கவனிக்கவில்லை.

சிறிது நேரம் கழித்து மழையும் காற்றும் நின்றன. எங்கும் சத்தமில்லாமல் இருந்தது. ஆகாயத்தில் நட்சத்திரங்கள் பிரகாசித்தன. சந்திரனும் தன் குளிர்ந்த கிரணங்களைச் சொரிந்து ஆகாயத்தில் தோன்றினான். இருள் மூடியிருந்த இடமெல்லாம் வெளிச்சம் உண்டாயிற்று. திடீ

றென ஓர் ஒளி தோன்றியது. ஒரு குரலும் கேட்டது. அக்குரல் வெகு தெளிவாக இருந்தது. மலர்களின் வாசனையைப்போல் மிகவும் இனிமையாக இருந்தது. அந்தக்குரல், "துருவா! இதோபார் என்னை" என்று சொல்வதுபோல் அவன் காதில் விழுந்தது.

துருவன் விழித்துப்பார்த்தான். அவன் எதிரில் ஓர் அழகிய வடிவத்தைக் கண்டான். அவன் ஒருபுறம் மகிழ்ச்சியும், மற்றொருபுறம் அச்சமும் கொண்டான். அவன் அவ்வடிவின் திருவடிகளை வணங்கினான்.

XI

பிள்ளைகளே! துருவன் முன் தோன்றியவடிவம் என்னவென்று நினைக்கிறீர்கள்? அவன் யாரைத் தவத்தினால் பார்த்தே தீருவதாக நிச்சயித்தானோ அந்த ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் வடிவமே! அப்பெருமான் நான்கு கைகளுடன் மலர்ந்த முகத்தோடு வந்து தன்னிடமிருந்த வெண்சங்கினால் அவனைத் தடவிக்கொடுத்தார். அப்பொழுதுதான் அவனுக்கு தந்நினைவு உண்டாயிற்று.

மாதவன் துருவனை நோக்கி, "துருவா! இச்சிறுவயதில் ஒருவரும் இப்படிப்பட்ட கடுந்தவம் செய்ததில்லை. நீ எதற்காக இப்படித் தவம்செய்தாய்? நான் சந்தோஷத்துடன் கேட்கிறேன். உன் விருப்பத்தைச்சொல்" என்று சிரித்த முகத்துடன் கேட்டார்.

துருவன், "எளியோனாகிய எனக்கு இரங்கி அருள் மிகுந்து இங்கு வந்த பரம்பொருளே! என்னைக்காக்கவந்த கருணைக்கடலே! தயாநிதியே! வணங்குகின்றேன். என்னைக் காப்பாற்றவேண்

டும். இதுவே என் பிரார்த்தனே" என்று சொல்லிக் கைகளேக்கூப்பி வணங்கி நின்முன்.

திருத்துழாய்மாலேயைத் தரித்து நின்ற பிரான் துருவனின் பக்தியை மெச்சி, "குழந்தாய்! உருவத்தில் சிறியவன் ஆனுலும் புத்தியில் பெரியவன் நீ. உன் தந்தையின் ராஜ்யத்தை ஆளக் கடவாய். உன் தாய் தந்தையர்களும் உன் பெருமையைக் கண்டு இன்பமடைவார்கள். நீ எவருக்கும் கிட்டாத 'துருவபதம்' என்பதைப் பெற்ருய். அது இன்றுமுதல் உன் பெயரால் வழங்கும். உனக்கு எல்லா மங்களமும் உண்டாகும்" என்று சொல்லி மறைந்தார்.

துருவனும் தன்முயற்சியால் ஏற்பட்டபலனே நினேயாதவனுய், அம்மங்களவடிவத்தை என்றும் பார்த்திருக்கமுடியவில்லேயே என்ற ஏக்கத்தோடு தன்தாய் இருக்கும் இடம் நோக்கி வந்தான். தன் வரவைநோக்கி ஏங்கி ஏங்கி நிற்கும் தாயின்முகம் சந்தோஷமடைய அவள் முன் வந்து நின்முன்.

"அம்மா! கண்டேன் பரந்தாமனே. உன்னுடைய அருளால் ஒருவரும் காணுத பரம்பொருளேக் கண்டேன். உன் அருளால் யாரும் அடையாத பெரும்பாக்கியத்தைப்பெற்றேன். தாயே! ஆசீர்வதியுங்கள்" என்று சொல்லி அவள் காலில் வீழ்ந்து வணங்கினுன். சுநீதிக்கு ஏற்பட்ட சந்தோஷத்தை என்னவென்றுசொல்வோம்! தரித்திரனுருவன் தான் பெற்றபொருளே இழந்து மீண்டும் பெற்ருல் எப்படிச் சந்தோஷிப்பானே, அப்படியே அவள் சந்தோஷித்தாள். துருவனுக்கு பரந்தாமனருள் கிடைத்தவிஷயம் ஊரெங்கும் பரவியது. தன் மகனேப் பிரிந்ததால் வருந்திய அரசனுக்கும் அச்சமாசாரம் எட்டியது.

உத்தானபாதன் பரிவாரங்களுடன் மங்கள வாத்தியங்கள் முழங்க துருவனிருக்கும் இடம் வந்தான். துருவனைக்கண்டான். கன்றை இழந்த பசு மீண்டும் கன்றைக்கண்டாற்போல் சந்தோஷ மடைந்து தன் இருகைகளாலும் அவனைக் கட்டித்தழுவி, வாரியெடுத்து, உச்சிமோந்து, தன்மடி மீது உட்காரவைத்து மகிழ்ந்தான்.

## XII

உத்தானபாதன் உலகம் மகிழ, நகர் எங்கும் அலங்காரம் செய்துவைத்து நல்லதினத்தில் துருவனுக்கு முடிசூட்டி அரசனாக்கினான். துருவனும் உலகமெலாம் புகழ, தன் முன்னோர்போலவே நியாயம்தவறாமல் ராஜ்யத்தை ஆண்டுவந்தான். அரசனுக்குப் புத்திரனில்லையே என்று ஏங்கிய ஜனங்கள் துருவன் ஆட்சியால் சுகமாய் வாழ்ந்து வந்தார்கள்.

துருவன் வெகுகாலம் நீதியோடு அரசாண்டு வந்தான். துருவன் அரசாட்சிமுடிந்ததும் பகவான் அவனுக்கு முன்பு கூறியபடியே ஆகாயத்தில் சிறந்த துருவபதவியைக்கொடுத்து அருளினார்.

குழந்தைகளே! இன்னும் ஆகாயத்தில் வடதிசையில் இருந்து துருவன் பிரகாசிக்கின்றான். நம்மைப்பார்த்து நமக்கு வழியைக் காட்டுகின்றான். இன்னும் வேண்டும் உதவியைப் புரிகின்றான். எல்லோரும் இன்றும் அவனைக்கொண்டாடுகிறார்கள். சுபம்.

மங்களம்! மங்களம்!! மங்களம்!!!

PRINTED AT THE DIOCESAN PRESS, MADRAS—1928. B 5730.